ஸ்ரீ



# நம்மாழ்வார் தாலாட்டு.



சீகாழி

ஸ்ரீமாந்: கி. சிதம்பரநாத முதலியாரவர்கள்

பொருளுதவியைக் கொண்டு

பண்டிதர்: P. R. கிருஷ்ணமாசாரியரால்

பதிப்பிக்கப்பட்டது.



தஞ்சை:

கல்யாணசுந்தரம் முத்திராசாலை.

1908

ஸ்ரீ

# நம்மாழ்வார் தாலாட்டு.

---

## காப்பு.

1 தென்குருகைமாறன் றிருவவதா[illegible]சரிதம்
நன்குருகித் தா[illegible]வே—யென்குருவாஞ்
செல்வச்சட கோப தேசிகன்பொற்சீர்பாதக்
கல்விப் பிரான்சரணங் காப்பு.



2 வச்சிரமெய்க் கூன்செழியன் மைந்தன் றிருவழுதி
பச்சையறந் தாங்கிசக்ர பாணியா—ரச்சுதரே
சீரியலுஞ் சேந்தருடன் செங்கண்ணர் போர்க்கழியார்
காரிகுலச் சேய்மாறன் காப்பு.

## நூல்.

1 சீர்பூத்த நீண்மதிளுஞ் செம்பொன்செய் கோபுரமுங்
கார்பூத்த மாளிகையுங் கற்பகக்கா வுஞ்செறிந்த

2 திருவண் பரிசாரத் தேவே சனையே
மருவவர விந்தத்தில் வாழ்திரு வாழ்மார்பன்

3 கற்றெடுத்த கல்விக் கடலா னருந்தவத்தாற்
பெற்றெடுத்த பெண்கள் பெருமா ளுடையநங்கை

4 பருவங் குறித்துநந்தம் பாக்கியத்தாற் றோன்றுந்
திருவின்வடி வுக்கேற்ற செல்வ மணவாளன்

5 எவனு மெனப்புவன மெல்லாங் குறித்தெடுத்து
நவநா கரிகனிவ னுடு மெனநண்ணிச்

6 சித்திரைமா தத்திற் றிருவோண நன்னாளில்
உத்தமயோ கத்தினல்ல வோரை முகுர்த்தத்தில்

7 திருவழுதி நாடுமுற்றுஞ் செங்கோல் செலுத்துந்
திருவழுதி நன்மரபிற் செல்வக் குமாரன்

8 காரியார் செங்கமலக் கைக்கொடுத்து மாதுனக்குப்
பாரியா மென்றே பரிவா லளித்தருளிக்

9 கோசலையும் பார்த்திபர்கள் கோமான் றசரதனும்
நேசமுடன் வாழ்ந்ததுபோல் நீடூழி வாழுமென

10 வாழ்த்தியபின் வேதியரும் மாதவத்தோ ரும்வாழ்த்தச்
*சூழ்த்ததிசை யோர்வாழ்த்தச் சொற்பா வலர்வாழ்த்த

11 நந்தாத தெய்வ நகரை யலங்கரித்து
வந்தார்க ளெல்லாம் வழியெதிரே வந்தேத்த

12 மாடத் திருக்குருகூர் மாநகரி லெண்டிசையோர்
நாடச் சிறந்துநெடு நாளரசு செய்ததற்பின்

13 கங்கையார் நன்மரபிற் காரியார் கற்புடைய
நங்கையார் செய்ய நளின முகநோக்கி

14 மானே விலையில்லா மாணிக்க மேதெவிட்டாத்
தேனே யொருவார்த்தை செப்புவது கேளென்ன

15 நாடு நகரமு நன்மணியு நல்வளமுந்
தேடும் பொருளுந் திரமா மெனவிருந்தோம்

16 குதலைமொழிக் கிண்கிணிக்காற் கோகனகச் செவ்வாய்
மதலைக ளில்லாத வாழ்வுமொரு வாழ்வாமோ

17 புக்கடிசி லுண்டு புறம்புல்கிக் கூத்தாடும்
மக்கள்முகங் காணாத வாழ்வுமொரு வாழ்வாமோ

18 ஐந்தடக்கி வேண்டு மறங்கோடி செய்தாலும்
மைந்தரைப்பெற் றுய்யாத வாழ்வுமொரு வாழ்வாமோ

19 மிகப்பே றளித்து விரசைநீ ராட்டும்
மகப்பே றடையாத வாழ்வுமொரு வாழ்வாமோ

---

* பார்த்திபர்கள் வாழ்ந்தநல்ல பாவாணர் தாம்வாழ்த்த என்றும் பாடம்.

20 இத்தனைகா லங்களுமீ தெண்ணினே மில்லையென
உத்தமனு முத்தமியு முள்ளமிக வேவாடி

21 ஈடேற்றிச் சென்மத் திடரேற்றி யந்தாம
வீடேற்றி வீறளிக்கு மெய்ப்புதல்வன் வேண்டுமெனச்

22 சிந்தித்து வாவித் திருநகரி மாமாலை
வந்தித் திறைஞ்ச வளையாழி யெம்பெருமான்

23 ஆகாய வாணிவடி வாகிக் குறுங்குடியில்
ஏகித் தொழுங்குழவி யீவோ மெனப்பகரக்

24 கேட்டபொழு துள்ளக் கிலேச மறநீத்து
வாட்டமொழித் தச்சுதனை வாயார வாழ்த்துதற்கே

25 தென்குறுங்கை மாநகரஞ் சேர்ந்துதெரி சித்துடலம்
நன்குருகிப் பத்திபண்ண நம்பிகன விற்றோன்றி

26 எத்திரசம் பத்துமுமக் கீட்டுஞ் சதுர்வேதன்
புத்திரசம் பத்தைப் பொறித்தா னிலையென்ன

27 அச்சுதா னந்தா ஹரிகேச வாகண்ணா
மச்சரூ பாவனந்தா வாமனா மாதவனே

28 ஏழு தலைமுறையாய் யாங்கள்தொண்ட ராகிநிற்க
வாழுமடி யோங்களுக்கு மக்கட்பே றில்லையென்றால்

29 ஊழ்வினையோ தெய்வ முனதருளும் பொய்யாமோ
வாழ்வினையே நல்கு மகவளிக்க லாகாதோ

30 முன்செய்த மாதவத்தை முற்று முடித்திலமோ
பின்செய்த பேறும் பெறும்பேறாய்ப் பெற்றிலமோ

31 கற்றாவுங் கன்றுங் கதறப் பிரித்தோமோ
பெற்றாரைப் பார்த்துப் பெருமூச் செறிந்தோமோ

32 பேதலித்து முற்பிறப்பிற் பிள்ளைப்பால் வார்த்திலமோ
காதலித்து மைந்தருண்ணுங் கையைப் பிடித்தோமோ

33 கற்புடைய மின்னார் கருவை யழித்தோமோ
பொற்புடைய பிள்ளைகளைப் போற்றி *யெடுத்திலமோ

* வளர்த்திலமோ என்றும் பாடம்.

34 சல்வினையே துஞ்செய்யா நரங்க ளொழியாத
வல்வினையோ மையோ மலடாய்ப் பிறந்தோமே

35 செங்கோலை விட்டுக் கொடுங்கோல் செலுத்தினமோ
வெங்கோப நீத்தார்க்கு வேதனைகள் செய்தோமோ

36 ஆறிலொன்று கொள்ளா தவனி புரந்தோமோ
ஊறிலன்பர் செய்த வுதவி மறந்தோமோ

37 என்றுவழக் காக வுரைத்தேங்கிப் பரதவித்து
நின்று புலம்பினர்பால் நேசத்தா லுள்ளிரங்கி

38 ஆதிநம்பி கண்ணுக் கணித்தா யெழுந்தருளி
நீதிமைந்த னுமக்கு நீரேகு வீரென்று

39 கண்ணீர் துடைத்துக் கரத்தினாற் றைவந்து
பெண்ணீர் மையினானீர் பேதலியா தேகுமென

40 வெள்ளையா ழித்துயிலும் வேதாந்த மூர்த்தியையே
பிள்ளையா கப்படைக்கப் பெற்றோ மெனமகிழ்ந்து

41 கண்டா தரிக்கவிண்ணோர் காதலிக்கப் பூதலத்தோர்
கொண்டாட மீண்டு குருகா புரிக்கேகித்

42 தென்னர் புகழச் செகத்தோர் பணிகேட்ப
மன்னர் வணங்க மறையோர் புடைசூழச்

43 சீர்புகழ வாழ்ந்தநாட் டேவி திருவயிற்றிற்
பார்புகழக் கெர்ப்பகுறி பையக்காண் பித்ததினால்

44 அங்கமெங்கும் வெண்பவள மாக வெளுவெளுத்துக்
கொங்கைவட்ட மிட்டுக் குறுங்கண் கறுப்பேறி

45 மேனிப் பசுநரம்பு மேற்றோன்ற வேற்றுமுகந்
தானித் தனைக்குமொரு சாட்சிக் குறிகாட்டப்

46 பண்டிபெருத் தோரழகு பாலித்து வேர்வைசிந்தி
யுண்டிவெறுத் துண்ணா துறக்கம் பெரிதாகி

47 ஆக்கைவிட்டு மெய்சோர்ந் தயாவருத்தங் கொண்டுநுனி
நாக்குலர்ந்து தாகித்து நாடா ததுநாடிச்

48 சாலப் புளித்ததுவுந் தண்சுவர்மேற் பூசுமண்ணும்
பாலொத்த நீறும் பலகாலமுமருந்தித்
49 திங்களீ ரைந்துந் திருவயிறு வாய்த்ததற்பின்
அங்கங் குழைந்துகுழைந் தாகுலமாய் நொந்துபட்டு
50 வெண்சங் கினமுழங்க வேதியர்பல் லாண்டிசைப்பப்
பண்சங்கைப் பட்டமொழிப் பைந்தொடியார் வாழ்த்தெடுப்பத்
51 தேவ ரனைவோருந் தேமலர்வா ரிச்சொரிய
மூவர் கருணை முகத்தா மரைமலர
52 அரம்பையர்கூத் தாட வணிமுரசந் தானார்ப்ப
நிரந்தரமுங் கொண்டல் நிதிமாரி பெய்யப்
53 பூபாரந் தீரப் புலவோ ரிசைபாடச்
சீபா டியமுரைத்தோன் சிந்தைசெய்யுந் தேவாகி
54 நாட்டுங் கலியாதி நாற்பத்து மூன்றாநாள்
வேட்ட திரு வைகாசி ‡வெள்ளிநாட் பூரணையில்
55 திருவிசா கத்துதையஞ் செய்யமட மானார்
மருவியைய னையனென்றே வாழ்த்திக் குரவையிட்டுப்
56 பொற்கலத்தி லேந்திப் புதுமஞ்சள் நீராட்டி
நற்கலையால் மெய்துடைத்து நாபித் தலம்பார்த்துச்
57 சர்க்கரையுந் தேனுமொன்றாய்ச் சாரித்துச் சங்கிலிட்டுப்
பொற்கொடியார் சேனை புகட்டியுச்சிக் கெண்ணெயிட்டு
58 நெற்றி பிடித்தழுத்தி நீண்டபசுங் கைமுறுக்கி
முற்றுந் தடவி முழந்தா ளிணைநிமிர்த்துச்
59 சோனை யுருவிச் சுடர்மூக்குத் தண்டுருவிக்
காண வினிய கனிவாய் வசம்பூட்டிப்
60 புத்திரனைக் கைக்கொடுத்த போதுவந்து காரியார்
முத்தமிட்டு மூரல் முகத்தா மரைநோக்கிப்
61 பூதானங் கோதானம் பூரிதா னம்வித்தின்
மாதானம் பூசுரர்க்கு மாசுரர்க்குந் தான்வழங்கி

‡ வெள்ளியார் என்றும் பாடம்.

62 நன்னிலத்திற் பன்னிரண்டா நாளாதி நாதர்திருச்
சன்னிதியிற் றொட்டிலிலே தக்கோனைக் கொண்டுவந்து

63 வீறன் கலைஞான மேதாவி யான்மகிழ
மாறனென நாமம் வழுவாது சாற்றியபின்

64 ஆனைக் கழுத்தி லலங்கரித்த பூந்தேரிற்
சேனைத் தளங்களுடன் செல்வனைக்கொண் டேர்க்கேகிக்

65 காதலாய்க் காண்போர்கள் கண்ணேறு வாராமல்
ஆதரவாய்க் கற்பூர வாலத்தி யுங்காட்டி

66 ஒப்பமிட்ட பொற்றகட்டி லுள்ளும் புறத்துமொன்றாய்ச்
செப்பமிட்ட வச்சிரத்தாற் செய்ததிருத் தொட்டிலுக்கு

67 வயிரக்கால் நாட்டி வயிடே ரியத்தைச்
செயிரறுத்து விட்டமெனச் சேர்வித் ததனூடே

68 காண்டகுசோ திச்சுடரோன் கற்றைக் கதிர்முழுதும்
பூண்டதென நீண்டதங்கப் பொற்சங் கிலிநாற்றிச்

69 செஞ்சூரி யப்படத்திற் சேர்த்தசிறு மெத்தையின்மேற்
பஞ்சூடு நீலப் படாத்தின் றழுவணையும்

70 கைக்கொட்டை யுஞ்சிவந்த காற்கொட்டை யுந்திருத்தி
மெய்க்கொக்க வேழடுக்கு வெண்பட்டு மேல்விரித்துச்

71 சூற்கட்டு மேகத்திற் றோன்றுமுடு ராசிமுத்தின்
மேற்கட்டி கட்டி விடுபூ மழைசிதறி

72 மருக்கொழுந்து விட்சியிரு வாட்சிமுல்லை மல்லிகைப்பூ
தருக்கொழுந்து கோகனகஞ் சாதிவேர் சண்பகப்பூ

73 சூழவிதா னித்ததனுட் சோதிப் பிழம்பொளிபோல்
வாழப் பரிவாய் மலர்க்கண் வளரவிட்டுப்

74 பாந்த ளரசன் பணாமகுடப் பார்காக்குஞ்
சேந்தர் புகழ்விளக்குந் தெய்வத் தனிச்சுடரோ

75 அங்கண்ணர் யார்க்கு மருட்கொழுகொம் பாய்நீதிச்
செங்கண்ணர் தோன்றச் செழித்தவழித் தோன்றலோ

76 கச்சுலவு கோலக் கனதனத்தார் சீராட்டி
யச்சுதர்க்கு மச்சுதரெல் ஞூதரிக்குங் கோளரியோ

77 வங்கர் கலிங்கர் மகதர் திறையீட்டும்
எங்கள்சக்ர பாணியா ரெண்ணியபோ ரேறே

78 கார்க்கழியா வேழக் கடறூண்டி மாறுபட்டோர்
போர்க்கழியார் தோளாண்மை பூத்தகுணக் குன்றமோ

79 மறந்தாங் கியசமைய வாதியரை வென்றே
யறந்தாங்கி யார்பே ரறந்தாங்கு மற்புதமோ

80 ஆழ்வார்க ளொன்பதின்ம ராரியர்முக் கோல்தரித்து
வாழ்வார்கள் தொண்டர்தொண்டர் வாழப் பிறந்தானே

81 தண்டமிழும் வேதாந்த சாரப் பெரும்பொருளும்
மண்டலமும் விண்டலமும் வாழப் பிறந்தானே

82 திருப்பதிநூற் றெட்டுஞ் செழுந்துளபத் தாம
மருப்பதிநூற் றெண்மர்களும் வாழப் பிறந்தானே

83 திருநாளும் மாதத் திருநாளுஞ் சான்றோர்
வருநாளு மெந்நாளும் வாழப் பிறந்தானே

84 தழைவளமுஞ் சேணிற் றருவளமு நீங்கா
மழைவளமு மெவ்வளமும் வாழப் பிறந்தானே

85 ஒன்பதின்ம ராகி யுரைத்ததிரு வாய்மொழியுந்
தன்பதியு நாளுந் தழைக்கப் பிறந்தானே

86 அண்டமா யண்டத் தடுக்கா யடுக்கழியாப்
பிண்டமா யொன்றும் பெருந்தகையைச் சொன்னார்

87 அனலும் விசும்பு மகலிடமுங் காற்றும்
புனலும் பொருவும் புராதனனைச் சொன்னார்

88 ஆலாகி யாலி னடையா யடைக்கிடந்த
மாலா கியவெகின வாகனனைச் சொன்னார்

89 பத்திக்கு வித்தாய்ப் பணித்தடங்காப் பண்ணவனை
முத்திக்கு வித்தாய் முளைத்தவனைச் சொன்னார்

90 நல்குரவுஞ் செல்வமும் நரகுஞ் சுவர்க்கமுமாய்
வெல்பகையு நட்புமாம் வித்தகனைச் சொன்னாரார்

91 கொங்கார் பொதும்பர்தொறுங் கோகனக வாவிதொறுஞ்
செங்கா லனஞ்சேர் திருவழுதி நாடனே

92 கால்பாயுஞ் சேற்றுக் கருமேதி பாயவரிச்
சேல்பாயும் வாவித் திருவழுதி நாடனே

93 முன்னம் பழுத்தபலா முட்புறத்தின் காய்சிதறத்
தென்னம் பழம்வீழ் திருவழுதி நாடனே

94 மஞ்சாலி முத்தோ வயல்முத்தோ காந்தியெனச்
செஞ்சாலி சூழுந் திருவழுதி நாடனே

95 மூசுவரி வண்டாட முல்லைமுகை விண்டாடுந்
தேசுகுடி கொண்ட திருவழுதி நாடனே

96 இருகூர் விழியா ரிசைபோலக் கூகை
குருகூரென் றோதுங் குருகைப் பெருமானே

97 நாலா கலைப்பொருளு நால்வேத மும்பயிலுங்
கோலா கலமாங் குருகைப் பெருமானே

98 வெஞ்சரத்தாற் புண்படுத்தும் வில்வே டனுங்கொடிய
குஞ்சரமும் போற்றுங் குருகைப் பெருமானே

99 நாடிவலஞ் சூழ்ந்தசங்க ராசனுஞ் சங்கமுனி
கோடிவலஞ் சூழுங் குருகைப் பெருமானே

100 கருவூரன் ஞானியார் காசினிவை குந்தங்
குருகூரென் றோதுங் குருகைப் பெருமானே

101 சுழிக்குந் திரைநீர்த் துறைதோறு முத்தங்
கொழிக்கும் பொருநைக் குருகைப் பெருமானே

102 என்றுதா லாட்டு மிசைக்குருகி நங்கையென்றன்
கன்றுமுலை யுண்ணாது காலங் கழிக்குமோ

103 ஆவா வெனப்பதறி யள்ளி யெடுத்தணைத்துக்
கோவா மணியைக் குறங்கி னிடைக்கிடத்தி

104 ஏந்திப் பிடித்திருத்தி யேலக் குழல்முடித்துப்
பூந்தெரிய லுஞ்சூட்டிப் பொற்கொண் டையுஞ்சாத்திப்

105 பொன்னி னரசிலைசூழ் பொற்பட்ட முஞ்சாத்தி
மின்னின் கிளைமான வீரபட்ட முஞ்சாத்தித்

106 திருவும் பிறைபுந் திகழ்ந்தசுட்டி மீதணிந்து
மருவுங் கொடிநெடிய வள்ளைக் குழைபெருக்கிச்

107 சீலைக் குதம்பையிட்டுச் சீராக வெண்ணெயிட்டுக்
காலைக் கதிரிற் கனத்த குணுக்குமிட்டு

108 வடிந்தகுழைக் காதில் மகரக் குழைசாத்திப்
படிந்தரத்னக் கொப்பணிந்து பச்சைமணி வாளியிட்டு

109 மூக்குப்பூ விட்டதின்மேல் மூக்குத்தி யுஞ்சாத்தி
நோக்குந் திருக்கழுத்தி னேக்கரிய காறையிட்டுத்

110 தாலியு மைம்படையுந் தங்கத்தி னலணிந்து
மாலிகையுந் தண்டரள மாலிகையுங் கோத்தணிந்து

111 முன்கை முதாரியிட்டு முத்தின் கடகமிட்டு
நன்குபெறு தோள்வளையு நற்பவள மும்புனைந்து

112 வெள்ளிவளை தந்தவளை வேகடஞ்செய் செம்பொன்வளை
யொள்ளியதா கக்கரத்துக் கொப்பாய்த் தெரிந்தணிந்து

113 அரைவடமுங் கிண்கிணியு மச்சு மரைநாணும்
நிரைவடமுங் கட்டுவட நீங்கா வரைக்கணிந்து

114 தண்டை சிலம்பு சதங்கைசிறு தாட்கணிந்து
கெண்டைவிழி மையெழுதிக் கீறுதிரு நாமமிட்டுக்

115 கட்டாய்த் திருநுதலிற் கஸ்தூரிக் காப்பெழுதிப்
பட்டாடை சாத்திப் பனிநீ ரயினிசுற்றி

116 அப்பாவென் னுருயிரே யாருயிர்க்கு மாருயிரே
யொப்பாரு மிக்காரு மில்லா வொளிவிளக்கே

117 கண்ணுக் கினியானே கட்டழகில் மிக்கானே
பண்ணுக் கினியானே பாகொழுகுஞ் சர்க்கரையே

118 தேனே மதுரமே செங்கருப்பந் தீம்பாகே
மானேர் விழியார் மனமுருக்குங் குஞ்சரமே

119 செல்வக் குழவணனே தேமாம் பழச்சுவையே
கல்விக் களஞ்சியமே கார்மருசீ ரோவியமே

120 கிட்டாத் திரவியமே கேடில்லா மெய்யுணர்வே
யட்டாங்க யோகத்துக் காணிப் பசும்பொன்னே

121 பேறளிக்கும் வித்தகனே பிள்ளைமா ணிக்கமே
†கூறரிய நித்திலமே கோமே தகத்தெளிவே

122 நந்தாத கோமளமே நாடரிய சொற்பொருளே
சிந்தா மணிவடிவே தித்திக்குந் தெள்ளமுதே

123 அல்ல லொழிக்கு மருமைப் பெருமானே
நல்ல திருமகனே நாவீ றுடையானே

124 திருவிசா கத்தில்வந்த தெய்வத் தனிச்சுடரே
சுருதியா ராயுந் தொடரிமலை காவலனே

125 பொருனைத் துறையானே பொதியமலை காவலனே
குருகைப் பெருமானே குமரித் துறையானே

126 செம்மலே நாவிற் றெவிட்டாத முக்கனியே
யம்மமுண்டு கண் துயிலா யற்புதனே யென்றென்றே

127 ஒக்கலைமேற் கொண்டுமுலை யூட்டநினைத் தூறுபால்
தக்கபடி முன்னே தரையிற் சிறிதூற்றிக்

128 கோகனகச் செவ்வாயிற் கொம்மைமுலை யைப்பிடித்து
மாகனகக் கையால் மடித்தருத்தும் போழ்தினிலே

129 மைந்தன் கடைவாய் வழியே வழிந்தொழுக
நைந்துபயப் பட்டுமட நல்லார் தமைநோக்கி

130 எங்கள் குடிக்கும் இறையோன் பெருங்குடிக்கும்
உங்கள் குடிக்கும் ஒருமகவாய்த் தோன்றினன்

131 பாலுண்ண வில்லை பசித்தழவோ தானில்லை
மேலுண்பா னென்றால் விழியுந் திறக்கவில்லை

---

† கோகிலமே என்றும் பாடம்.

132 உச்சி குழியவில்லை யுள்ளங்கால் வேர்க்கவில்லை
அச்சங்கை யுண்டா மரிவையரிங் கெய்தவில்லை

133 இயக்கமொன்றுங் காணே னிளைத்திளைத்து மூசி
மயக்கம் பெரிதாய் மருண்டிடவு மில்லை

134 கலையொண்ணாத் திங்கணுதற் கன்னியரே தாயார்
முலையுண்ணாப் பிள்ளைகளை மூதுலகிற் கண்டதுண்டோ

135 பெண்கொடியீ ரம்மமுண்ணப் பேதலித்துப் பண்டியெக்கிக்
கண்பிசைந்து வாய்காட்டாக் காதலரைக் கண்டதுண்டோ

136 பெண்ணானீர் நீங்கள்பெற்ற பிள்ளைகளிற் சேனைமுதல்
உண்ணாது பூரிக்கு முத்தமரைக் கண்டதுண்டோ

137 கைகா லசையாமற் கண்ணும் விழியாமல்
மெய்வாய் திறவாத வித்தகரைக் கண்டதுண்டோ

138 இருத்தினா லெட்டுநா ளாகிலுமிவ் வண்ணம்
இருக்குங் குழந்தைகளை யிவ்வுலகிற் கண்டதுண்டோ

139 எடுத்துக் கிடத்தினால் யான்கிடத்து மவ்வண்ணம்
படுத்திருக்கும் பாலகரைப் பாருலகிற் கண்டதுண்டோ

140 பண்பினுடன் மையெழுதப் பையத் திறந்துபின்னைக்
கண்டிறவாப் பாலகரைக் காசினியிற் கண்டதுண்டோ

141 மறுகியன்னை நின்று மயங்கினாற் சற்றே
குறுமூரல் செய்யுங் குழவியையுங் கண்டதுண்டோ

142 ஈதேது மாயமோ வெண்ணமுடி யாதென்றார்
மாதே குழந்தையைநா மால்முனம்வைப் போமென்றார்

143 நன்றுரைத்தீ ரீதாதி நாரா யணன்செயலே
யென்றுரைத்துத் தன்கணவற் கிவ்வண்ணஞ் சொன்னதற்பின்

144 தண்சுடரோ னென்னவன்னத் தந்தச் சிவிகையின்மேல்
எண்சுடரோ னென்ன வெழுந்தருளப் பண்ணுவித்துப்

145 பல்லியமுஞ் சங்கினமும் பம்புமுகில் போல்முழங்க
மெல்லியலா ராலவட்டம் வெண்சா மரையிரட்டப்

146 பூச்சக்ர வாளப் புவியோர் புடைசூழ
மார்ச்சக்ர வாளவன்ன வட்டக் குடைநிழற்றச்

147 சங்கீத மேளஞ் சதிமுறையா கப்பயில
நங்கீதங் கேளுமென நாரதர்யாழ் வாசிப்பக்

148 கயரதவா சிப்படைமற் காலாட் படைமிடையச்
செயசெயவென் றேத்திச் செகவேந்தர் நின்றிறைஞ்ச

149 நீலமலை போற்பொலிந்து நின்றபெரு மான்றிருமுன்
கோலமலை போற்பொலிந்த கோதிலாப் பாலகனைத்

150 தெண்டமிட விட்ட திருத்தாய் மனங்குளிரக்
கண்டுகண்டு காரியார் கண்கள் களிகூரச்

151 சுற்றத்தார் பின்றொடரத் தொல்புவியோர் பூரிக்கப்
‡ பற்றற்றார் கொண்டாடப் பாகவத ரேத்தெடுப்பக்

152 காதசையத் தோளசையக் கையசையத் தாளசையத்
தாதசையப் பூவசையத் தாரசைய மெய்யசைய

153 மேரு விமானமென மேவியுறை கோயில்சுற்றிப்
பேருகத்தின் சீர்மை பெருகுந் துவாபரத்துள்

154 ளோருகந்த வானிமூ லத்திலே யுற்பவித்த
தாருவுர கப்புளிக்கீழ்த் தானே தவழ்ந்தோடித்

155 தெற்கே முகநோக்கிச் செய்யபது மாசனத்தில்
விற்கேழ் நுதலார் விரகா னலங்கடந்த

156 போதத் தளவே புதிது புதிதாகச்
சீதப் புனிதத் திருவுள்ளம் வேரூன்றக்

157 கண்ண னடிக்கமலங் காமித்து மெய்ஞ்ஞானக்
கண்ணனென வுண்மைக் கரமுத் திரைதரித்து

158 மண்ணவரும் விண்ணவரும் வாழ்த்தெடுப்ப வேதாந்தப்
பண்ணமுத மூறப் பரஞ்சோதி யாயிருந்து

159 நாசி நுனிநோக்கி நாட்டம் பிறழாமல்
மூசியெதி ரோடுபெரு மூச்சு மகத்தடக்கி

‡ பற்றுதார் கொண்டாடப் பாசபதர் ஏத்தெடுப்ப என்றும் பாடம்.

160 மார்ப நிமிர்ந்துதிரு மந்திரமே தாரகமா
யார்வமுடன் கொப்பூழி லம்புயவா மக்கரத்தை

161 வைத்துயோ கத்திருந்த வாறுதெரி சித்துலகோர்
மொய்த்துவழி பட்ட முறைநோக்கி யீராறு

162 திங்கள்மட்டா பாவிபெற்ற சித்திரமே போற்சிறந்த
மங்கலரூ பத்தினெழில் வாய்த்த சிறுபாலன்

163 தவழ்ந்ததொன்றும் போதுமெனத் தங்களிலே சொல்லி
யுவந்துவந்து பார்த்துப்பார்த் துள்ளங் களிப்பாகித்

164 திருப்புளிக்கீழ் வீற்றிருந்த சேயை யெடுத்தளவிற்
பொருப்பையசைத் தாலுமிந்தப் புத்திரன்வா ரானென்றே

165 நங்கைமட மாதுவைக்க நங்காரி யார்பரிவா
யங்கைகொடு சீரா யணைத்தெடுத்துப் பார்த்ததற்பின்

166 மானு ரெடுத்தார் மகவுடையோர் தாமெடுத்தார்
ஆனுத செங்கோ லரசரெல்லாம் வந்தெடுத்தார்

167 நானு விதத்தாலும் நம்மா லசைவுபடான்
ஆனுலு மிந்தமைந்த னணைக்குந் தானசையான்

168 என்றெவருங் கூற விரங்கித் தரங்கியவர்
மன்றல்மலர்க் கூந்தல் வடிவுடைய நங்கைமின்னுர்

169 கைசோர வுள்ளங் கரையக்கண் ணீர்சோர
மெய்சோரக் கால்சோர விம்மல் பொருமலாய்

170 நோய்விட்ட பின்னுமந்த நோயே பிடித்தார்போல்
வாய்விட் டழுதரற்ற மாட்டாம லுள்ளடக்கி

171 அன்றுபோற் போட்ட வணையினிடை யிற்கிடவா
தின்றுதவழ்ந் தோடவைத்த வெம்பெருமா னேயிரங்காய்

172 சாத்திரற்குங் காணுத தாமோ தராவிரங்காய்
வீற்றிருக்கப் பண்ணுவித்த மெய்ப்பரந்தா மாவிரங்காய்

173 அறமே யிரங்கா யருண்மூர்த்தி யேயிரங்காய்
மரமே யிரங்காய் வணதேவ தாயிரங்காய்

174 விண்ணே யிரங்காய் விதிவலியே சற்றிரங்காய்
மண்ணே யிரங்காய் மதியாத வாவிரங்காய்

175 ஆரிரங்க வல்லாரென் ருருகுலிக்கு மக்காலம்
பாரிடங்க ளோட்டப் படித்தமந்த்ர வாதியரும்

176 பண்டிதருந் தங்கள்தங்கள் பார்வைக்கு மூலிகைக்குந்
தண்டுதலில் லாது சலித்துத் தடுமாறுஞ்

177 செய்கைதனிற் பேதித்துச் சிந்தா குலித்துநைந்து
கைதவமென் பார்சிலவர் காரணங்கென் பார்சிலவர்

178 சேனை முதல்வனென்பார் செய்தவத்தோங் காணென்பார்
ஆனை யிடரொழித்த வச்சுதா னந்தனென்பார்

179 அவ்வவர்கள் தங்கள்தங்கட் கானபடி சொல்வதெல்லாங்
கௌவைபெரி தாய்க்கேட்டுக் நான்முனையை விட்டகலார்

180 இன்னம் பருணிதர்வந் தெய்திநந்தம் பாக்கியத்தால்
அன்னமுண்ண வாய்பேச வாதரிக்கப் பண்ணுவித்தால்

181 ஆகாதோ வென்றே யனைவோரு மங்குவிட்டுப்
போகாது காத்திருந்து புத்திரனுக் கன்னைமார்

182 எவ்வண்ணஞ் சீராட்டி யெவ்வண்ணம் பாராட்டி
யெவ்வண்ணம் போற்றுவா ரவ்வண்ணஞ் செய்துவந்தார்

183 ஆண்டுதொறு மாண்டுதொறு மங்க மவையவங்கள்
நீண்டு தசைந்து நிரந்தரம்பூ ரித்துப்

184 பரவச மாகிப் ப்ரபத்தியே பண்ணி
நிரவதிக ஞான நியமநிலை யுண்டாகிப்

185 பேரோகை யன்பாற் பிதிர்ந்தோடக் கொங்கைவிம்மி
வாரோ டிகலு மறுக்கமுந்தான் கண்டுகெண்டு

186 மாரு வழுதிகுல வாழ்வே மலக்குநா
வீரு புவிவேந்தர் வேந்தே குருகூரா

187 பொற்காரி யாருனக்குப் பொற்கழுங்கும் பொற்பந்தும்
பொற்காம தேனுவும்பொற் பூவும் வரவிட்டார்

188 தென்னர்சிறு தேருஞ் சிறுபறையுந் தொட்டிலுஞ்செம்
பொன்னம் மனையும் பதிதாய் வரவிட்டார்

189 சப்பாணி கொட்டித் தளர்நடையிட் டப்பூச்சி
யெப்போதுங் காட்டி யெமக்கின்ப நீதருவாய்

190 திருமஞ் சனமாட்டிச் சிற்றாடை சாத்தி
மருமஞ் சரிசூட்ட மாதரார் வந்துநின்றார்

191 சிற்றில் சிதைத்தழிக்குஞ் சிற்றடியைக் காணவென்றே
சிற்றில் பலகோலித் தெரிவையர்கள் சூழ்ந்துநின்றார்

192 வேலையிட்ட கண்ணாருன் மெய்யழகைப் பார்த்துப்பூ
மாலையிட்டு நிற்கு மணக்கோலங் காணவந்தார்

193 அமரரினு மாற னழகுடையா னென்றே
குமரிருந்த மாதர்மடல் கொண்டெழுதிப் பார்க்கின்றார்

194 உன்கணவ னேமடவீ ருன்னினும் பெண்மைமிக்காம்
என்கணவ னென்றே யிகலிமயல் கொண்டுநின்றார்

195 இளவரசு தேவரீ ரெங்களுக்கென் றேத்தி
வளவரசர் கப்ப மலைபோற் குவித்துநின்றார்

196 பெருவழுதி நாடாளும் பிள்ளை யிவனென்றே
திருவபிடே கம்புனையத் தேசிகரெல் லாம்வந்தார்

197 ஏதேனு மெண்ணா திருக்கின் றதுமியல்போ
நாதா வெனவுரைத்து நாட்கழிக்குங் காலத்தில்

198 பொருந்துஞ் சதுர்வேதப் புனிதர்வடி வாகித்
திருந்துந் துவாபரத்திற் சித்திரையிற் சித்திரைநாள்

199 கோளூரி லுற்பவித்துக் குற்றமற்ற சிந்தையனாய்
வேளூர் கணையை விலக்கும் பொருட்டாகக்

200 கங்கா நதிப்புனலிற் கார்கா லமும்படிந்து
வெங்கால் கனிசருகு வெய்யோ னொளியருந்திப்

201 பஞ்சாக் கினிநடுவே பலகா லமும்பழகி
யஞ்சா யுதத்தோனை யாதரிக்கு மக்காலம்

202 தென்பா லொருகோடிச் செங்கதிரோ னின்றுதித்து
முன்பாகத் தோற்று முறையறும்பூ தென்றுணர்ந்து

203 பின்னொருவர் காணாது பேதையேன் கண்ணருகு
மன்னுவதே தென்றே மலைத்தோ மறியாமல்

204 நன்றிசெய்யுந் தண்புனலி னாமுழுகு நம்முகத்தைத்
தென்றிசையை நோக்கித் திருப்பிவிட்ட காரணத்தால்

205 மண்டலத்தார் செய்ததவம் வந்துவெளிப் பட்டதெனக்
கண்டக் கதிரோன் கதிரே வழிகாட்ட

206 வந்தான் பொருநை வடகரையில் வந்தேற
நந்தா வொளிப்பிழம்பாய் நாடோறுந் தோற்றிநின்ற

207 செய்யோனை யின்று தெரிசிக்கப் பெற்றிலமே
ஐயகோ வென்றே யளவறுக்க மாட்டாமல்

208 நிற்கும் பொழுதிலந்த நேமிச் சுடர்வேந்தன்
அற்குன்றுங் காந்தி யடங்கியதிவ் வூரிலென

209 உள்ளத்தி லெண்ணி யுவட்டெறியுஞ் சங்கணிநீர்
வெள்ளத்தி னீராடி மீண்ட வளவையினில்

210 இங்குள்ள வற்புதமே தென்றுவினா வும்பொழுதில்
அங்குள்ளா ரெங்க ளரசன் குலக்குமரன்

211 வாயுந் திறவான் மலர்க்கண் ணிணைநோக்கான்
தாயை முகம்பாரான் றந்தையையும் வாவென்னான்

212 என்றுதவ ழுப்படித்தா னன்றுமுத லின்றளவும்
ஒன்று மிருப்பி லொழியாது வீற்றிருந்தான்

213 சேயென்றாற் சேயோ செழுமணிதான் கொண்டநோய்
பேயென்றாற் பேயுமன்று பேசவரி தாமென்றார்

214 அன்னாரை நோக்கி யருள்சுரந்த சிந்தையனாய்
நன்னா வலன்புகுமூர் நாதன் மதுரகவி

215 யானறிய வேண்டு மிறையோன்பாற் சொல்லுமென
மான பரனொருவன் வந்தா னெனப்பகர

216 மந்திரிமார் கேட்டு மதித்தெதிர்கொண் டங்கேகி
முந்தி வணங்கி முனிப்பெருமா னேயிந்த

217 மதலைமொழி பேசினல் வையமெல் லாமுமக்கு
முதலரசு நல்கு முயர்ச்சியிடு வோமென்ற

218 வார்த்தையைக்கேட் டுப்பொறுக்க மாட்டாதா னேமகவைப்
பார்த்தவரின் மிக்காய்ப் படித்தவன்போற் ருேற்றுதே

219 ஊசி நுழையா வுரோமச் சடைமுடியான்
பாசிபற்று மேனியினன் பார்க்குந் தொழிலறிய

220 வல்லவனே வென்றிகழ மன்னன் றனைக்கேட்க
நல்லவனங் கேக நவிலு மெனவிடுத்த

221 ஒண்டொடியார் பின்னேகும் யோகி முகநோக்கி
யண்டர்குரு வேயெங்க ளாவிமைந்தன் பேசினல்

222 யாமுமக்குத்தொண்டுசெய்வோமென் றுரைத்தபோதுதக்கோன்
கோமுதல்வ ரோடும்போய்க் கோயிற் புறமாக

223 நின்று லிவன்வார்த்தை நீர்கேட்கப் பண்ணுவிப்பேன்
என்று தரங்கூற வெல்லோரும் பின்னடையப்

224 பாகார்ந்த செஞ்சொற் பராங்குச மாமுனிவன்
ஏகாந்த யோகத் திருந்த செயனேக்கி

225 இச்சோதி யோவென் னிதைய முருக்கியது
முச்சோ தியினு முழுச்சோதி யென்றிறைஞ்சி

226 ஆடியா டிப்பாடி யங்கோடி யிங்கோடி
நாடிநா டிப்பார்த்து நங்கை பெறும்பேறே

227 வானத் தவர்பேறே மாநிலத்துள் ளார்பேறே
ஞானத் தவர்பேறே நன்ஞ வலர்பேறே

228 என்பேறு மென்பதற்கு மேதுவுமிப் போதுளவால்
அன்பேறு மென்புருகு மாதரவு மிக்காகும்

229 அங்கம் புளகமெழு மானந்த வாரியெழுந்
துங்க முகமலருஞ் சுந்தரத்தோள் பூரிக்கும்

230 சென்றுடுந் தீர்த்தமெதிர் வந்தாடப் பெற்றதே
யென்று யிரந்தரமா யிச்சைப் படியியம்பிப்

231 பித்தே றினர்போலப் பேதலித்து மெய்மறந்து
கொத்தேறு பூவுங் குழையும் பறித்தெறிந்து

232 தன்னைப் புகழ்ந்து தனைத்தானே பூசித்துப்
பின்னைத் தெளிந்து பிழைத்தே னெனப்போற்றிக்

233 கரியதிரு மேனியெங்கே கைநான் கிரண்டெங்கே
பெரியதிரு வுந்திமலர் பெற்ற பிரமனெங்கே

234 பாகத்தில் வாழும் பரசுதரித் தோனெங்கே
ஆகத்தில் வாழு மலர்மேன் மடந்தையெங்கே

235 அண்டமுண்ட செவ்வா யரவிந்தப் போதிதுவோ
பண்டகில மேழும் பரந்தளந்த தாளிதுவோ

236 ஆலந் தளிரி லடங்கும் வடிவிதுவோ
சீலம் பலவுந் தெரிந்துணரக் கூடுமோ

237 குன்றே மரமே குளிர்புனலே காமினெனத்
தன்றாயை நோக்குந் தனிக்கன்று போல்மகிழ்ந்து

238 நிலைவணக்கி மெய்யொடுக்கி நீதிநெறி யாகத்
தலைவணக்கிக் கையொடுக்கித் தாழ்ந்துமுறை தப்பாமல்

239 வாய்புதைத்துத் தூசொதுக்கி வந்துதனை யாட்கொண்ட
சேயுகக்கு மாறு திருச்செவியி லோர்வசனம்

240 சித்தின் வயிற்றிற் சிறிய பொருள்கிடந்தால்
எத்தைத்தின் றெங்கே கிடக்குமென வெங்கோமான்

241 அத்தைத்தின் றங்கே கிடக்குமெனு மவ்வார்த்தை
பத்துத்திக் குங்கேட்கப் பார்த்திபர்க ளோலமிட்டுப்

242 புத்திரனைப் பேசுவித்த புண்ணியனே யென்றவர்க்குப்
பத்திபத்தி யாகப் பணிதுகிலுஞ் செம்பொன்னும்

243 மலைபோற் குவித்துமன்னர் மண்டலீ கர்முதலோர்
கலையார்ந்த தண்புழுகு கஸ்தூரி கற்பூரம்

244 எண்ணெய்மஞ்ச ணீர்களப மேலச் செழும்பனிநீர்
வெண்ணெய்தயிர் பானறுநெய் வீதிதோ றும்பெருக்கி

245 ஆறிரண்டு நாட்களியாட் டாடிக் களிகூர்ந்து
வேறிரண்ட கண்ணரும் வேந்தர்வே றுள்ளாரும்

246 தென்பூர லுதைய தினகரனைக் கண்டோனே
யன்பாக யாங்க ளளித்த திரவியத்தைக்

247 கைக்கொள்ளா தேவெறுத்த காரணத்தைச் சொல்லுமென
மெய்க்கொண்ட மாதவத்தை வேட்டநமக் கேனிதென்று

248 கூறியபின் னுங்கள் குலதரும மீதென்றல்
ஆறியசீற் றத்தா யடியோங் குழவிதனை

249 நன்றகப் பேசுவித்து நாட்டந் திறப்பித்துச்
சென்றுய்ச்சி யூட்டுந் திருமுலைப்பா லுண்ணவைத்து

250 வாழ்வருள்வீ ரென்றுரைத்த மாற்றந் தனைக்குறித்துத்
தாழ்வலத் தோன்றுஞ் சடகோப னெம்பெருமான்

251 பரமபத நாதன் பரஞ்சோதி மூர்த்தி
பரவாசு தேவன் பரந்தாமத் தண்ணல்

252 பத்துருவா யுற்பவித்தும் பாரோர் திருந்தாது
தத்துவத்தை விட்ட தவறனைத்துஞ் சிந்தைசெய்து

253 வேதத் தமிழை விரித்துரைக்க வேண்டுமெனப்
போதத் தரவைப் புளிக்கா வணமாக்கி

254 அடியேனும் பட்டர்பிரா னும்வாரும் வெற்றிக்
கொடியாங் கருடனெனக் கூறும் படியாக்கி

255 வாரணத்தைப் பொய்கை வனசப் பிரானுக்கித்
தாரணிதண் டத்தைத் தமிழ்ப்பூதத் தாராக்கிப்

256 பேரான நாந்தகத்தைப் பேயாழ்வா ராக்குவித்துப்
போரா ழியைமழிசைப் புத்தேளி ராக்குவித்து

257 நீலக் கடலளித்த நேமிச் சுடர்மானும்
கோலக் கவுத்துவத்தைக் கொல்லிக் கிறையாக்கி

258 ஆர்ந்தவன மாலிகையை யன்பர்தாட் ணோக்கிச்
சேர்ந்த மறுவைத் திருப்பாணாழ் வாராக்கிச்

259 கூர்ங்கணையா லொன்னார் குடர்பிடுங்கி மாலையிட்ட
சார்ங்கவில்லை மங்கைத் தலைவர்பெரு மானாக்கித்

260 தேசத் தவரிற் சிறந்தகெற்ப ரேகையுமாய்த்
தாசருக்குந் தாசன் றனக்குத்தா னேயாகி

261 மகவாசை யுங்களுக்கு மாற்றவந்தா னல்லாற்
புகலேது முண்டோநீர் போமினெனச் சொன்னதற்பின்

262 தாழ்ந்து வணங்கித் தபோதனரே நாங்களிங்கு
வாழ்ந்தோம்வாழ்ந் தோமிந்த மண்டலத்தில் வாழ்ந்தோமே

263 நம்பி யுரைத்ததுவு நாங்கள் மறந்துவிட்டோம்
எம்பெருமா னீருரைக்க வின்று தெளிந்தோமே

264 இப்பேறு பெற்றவர்க ளெங்களைப்போ லின்னமிந்த
முப்பே ருலகில் மொழிய வொருவருண்டோ

265 எம்மி லுயர்ந்தவரா ரெம்மிலுஞ் சீரியரார்
இம்மண் டலத்தவரி லென்றே மனந்தேறித்

266 தந்தையுந் தாயுந் தனயனென வெண்ணாமல்
முந்தை முதல்வனென முக்கால் வலஞ்செய்து

267 சேவித்து நாமிச் செனனத்தின் முத்தருடன்
பாவித்தோ மென்றே பலகா லமும்பகர்ந்து

268 முன்னைப் பழம்பொருளை மூவா முதலோனைத்
தன்னைத்தா னொப்பாந் தலைமகனைத் தத்துவனை

269 எண்ணிரண் டாண்டு மெறும்பீக் கடியாமற்
கண்ணின் மணிபோலக் காத்திருந்தோங் காவலனே

270 ஐயா வுனக்கே யடைக்கலமிப் பாலனெனக்
கையால் மதுர கவிக்குக்காட் டிக்கொடுத்துத்

271 திங்கள் மணிமாடத் திருக்குருகூர் சென்றடைந்து
திங்கடொறுந் திங்கடொறுந் தென்குருகை மாநகரில்

272 இந்துநுதன் மாது மிறைவர் பெருமானும்
வந்துவந்து போற்றி யதுரகவி யைப்பணிந்து

273 நீர்செய்த பாக்கியமிந் நீணிலத்திற் செய்தவரார்
பார்செய்த பாக்கியமாம் பாவலர்கள் கோமானை

274 இடைவிடா தாராதித் தேத்தினீ ரெங்கட்
குடையவர்நீ ரல்லா லொருவருண்டோ வென்றுரைத்து

275 மீனமுத லாகமுன்ன மேவுமவ தாரங்கள்
ஆனதெல்லாம் பாமாற னன்னோர்க்குக் காண்பித்துச்

276 சேவைபிர சாதிக்கத் தெரிசித் தவரிருக்க
ஆவதொரு கோயி லமைப்போ மினியென்னப்

277 பொற்கோயி லுண்டாக்கிப் பூசனைசெய் தண்டருக்கு
முற்கோ விவர்களென முத்திநிலை வீடுபெற்றார்

278 காலங் குறித்திருக்குங் கண்ணன் பரந்தாமன்
ஞாலங் குறித்தேத்த நான்சொல்ல வேண்டுமென

279 மேரு கிரிமுகட்டின் மின்பூத்த மேகமென
வாரிதியி லுற்பவித்த வாரிச மங்கையுடன்

280 புள்ளரசிற் றோன்றிப் பொலியமலர்க் கண்விழித்து
வள்ளமணி வாய்திறந்து மங்கலச்சொல் லாற்புகழச்

281 சிலைக்கோல நெற்றித் திருமாது கேள்வர்
இலைக்கொருவ ராகி யென்னைப்பா டென்னைப்பா

282 டென்னத் தமக்கேற்ற வெம்பெருமான் யாவரையும்
பன்னத் திருப்புளிக்கீழ்ப் பாடியுவப் பாக்குவித்து

283 அந்தாதி யாகி யதிகரிக்கும் பூதலத்தோர்
சிந்தா குலந்தவிர்க்குந் தெய்வப் பிரபந்தத்தில்

284 ஓராத சிந்தை யுலகத்துச் சம்பந்தஞ்
சேராமல் வேண்டுந் திருவிருத்த நூறும்

285 பனுவநெறி நீத்தார் பணியுமா லின்குணங்கள்
அனுபவிக்கச் செய்ததிரு வாசிரிய மேழும்

286 அந்த வனுபவத்தா லுண்டா மவாவெல்லாம்
முந்தவுரை யந்தாதி முத்தமிழெண் பத்தேழும்

287 தங்கு மவாவுக்குத் தகுதியா மீசுரனை
இங்குவந்து சேர விசைத்ததிரு வாய்மொழியில்

288 எய்ந்தவொன்றும் பத்தி விசையுமிரண் டாம்பத்தில்
ஆய்ந்தடையத் தக்கோ னருள்மாய னென்றதுவும்

289 திருத்தியமூன் றும்பத்திற் செஞ்சொனா லாம்பத்தில்
அருத்தி யுயிர்நிலையை யாம்படியே சொல்வதுவும்

290 இயலுமைந் தாம்பத்தி விசையுமா றும்பத்தில்
உயிரரியைச் சேர்தற் குபாய முரைத்ததுவும்

291 நீட்டுமே ழாம்பத்திற் சீர்திகழெட் டாம்பத்தில்
வீட்டு வழிக்கு விரோதமறச் கூறுவதும்

292 தக்கவொன்ப தாம்பத்திற் சாற்றியபத் தாம்பத்தில்
மிக்கபல முண்டாகும் வித்தாரம் பேசுவதும்

293 பண்ணமுத மூறப் பகர்ந்தவொன் றும்பத்திற்
கண்ணனே காவற் கடவுளென்ற கட்டுரையும்

294 சொல்லால் வகுத்துத் தொகுத்தவிரண் டாம்பத்தில்
எல்லார்க்கு மாலே யினியனென்ற கட்டுரையும்

295 நாவின்மது ரஞ்சுரக்க நாட்டியமூன் றும்பத்தில்
ஆவி நெடுமாலை யனுபவிக்கு மென்றதுவும்

296 விரிதிரைநீர் மண்டலத்து வேட்டநா லாம்பத்தில்
அரிபிரிய மாக வடையுமுயி ரென்றதுவும்

297 போதுதொறுந் தொண்டர் புகழுமைந் தாம்பத்தில்
ஓது முபாய முயிர்க்கரியே யென்றதுவும்

298 உய்யும் படிக்கே யுரைக்குமா றும்பத்தில்
செய்யு முபாயந் தெரியும்வகை செப்புவதும்

299 பெரும்புவியோர் வாழப் பிறந்தவே ழாம்பத்தில்
விரும்புவதி லுண்டாம் விரோதநிலை செப்புவதும்

300 சந்ததமு மன்பர் தரிக்குமெட் டாம்பத்தில்
அந்த விரோத மழியுமெனக் கூறுவதும்

301 ஓதினல் முத்தி யுதவுமொன்ப தாம்பத்தில்
ஆதியால் நாடோறு மாம்பலத்தைச் சொல்வதுவும்

302 திவாகரனைப் போலுதையஞ் செய்தபத் தாம்பத்தில்
அவாவறுத்து வீட்டை யடைந்தமையே சொல்வதுவும்

303 புகுமூர ஞதமுனி பூதூர் முனிவன்
தகுமூர் நயக்கிவையே தானெனச் சிந்திப்பான்

304 மட்டோ லிடுந்தாம மாறனரு ளிச்செயலைப்
பட்டோலை யிட்டபிரான் பட்டோலை கொண்டிதெல்லாம்

305 நீணிலத்தி னின்றதற்பி னேமித் திருக்கரத்தான்
சேணிலத்தி னின்றுந் திரும்பி யெழுந்தருளி

306 முப்பத்து முக்கோடி தேவர் முனிவர்குழாம்
எப்பத்தி தோறு மிறைஞ்சவெதிர் தோன்றினன்

307 திருவாணை யிட்டுன் திருவாணை கண்டாய்
தருவாய் பரமபதந் தந்தொழியப் போசேல்

308 அமலா வெனமறிக்க வச்சுதா னந்தன்
கமலா சனனே கடல்ஞால மெல்லாம்

309 இன்னம் பிறந்திறந்தா லீடேற்ற முண்டாமோ
உன்னன் பவர்க்கே யுதவும் பொருட்டாகப்

310 பொய்கைமுத லானோர் புகன்றதுவு நீரருளிச்
செய்ததுவும் பின்னோர் தெரிந்துரைக்கும் பாடல்களும்

311 பண்பா லுபதேசம் பண்ணுமெனப் பூமடந்தை
நண்பா வடியேற்கிந் நாடிபிடி யாதென்னக்

312 கண்ட மதுரகவி காரிமா றுவெனையுங்
கொண்டகன்றல் நாயேன் குறைமுடியு மென்றுரைத்த

313 மெய்யன் பனைநோக்கி மேதினியி லுள்ளோர்க்குச்
செய்ய மறைத்தமிழைச் செப்புவதார் நீயல்லால்

314 அந்தரங்க ருண்டோ வகிலத்தில் வாழ்தியென
எந்தைபெரு மானே யிருக்கமுடி யாதென்றான்

315 வாழ்வான தண்டுழாய் மாலைப் பொலிந்துநின்றார்
ஆழ்வார்கள் கோமானே யாதரித்துன் பாலடைந்த

316 இந்த மதுரகவி யேங்கிக் கரைந்துருகி
நைந்துதடு மாறு மருமுரைத்த வண்ணமே

317 இத்தலத்தில் வாழ்ந்தருளு மின்றமுத லும்முடனே
நித்தியமா கப்பொலிந்து நிற்போ மெனவாழி

318 நாரணனு திப்பிரா னுட்டும் படிதிருந்தி
யாரண முத்தமிழோ ராயிரமும் பாடவல்லான்

319 மதுரகவி சிந்தை மருளாத வாறே
சதுர முகமலர்ந்து தண்ணளியா னோக்கி

320 நாமுனக்குத் தஞ்சம் நமக்குநீ யேயுலகில்
ஆமுதல்வ னென்றே யபயத்தஞ் செய்தருளி

321 முன்கங்கை யின்பால் முழுச்சுடராய்க் கண்டதிலும்
பின்புபதி னாறு பிராயந் தொழுததிலும்

322 பேராசை மிக்காகிப் பேரா யிரமுடைய
நாரா யணனில் நமக்கிவனே தெய்வமென

323 மஞ்சனநீ ராட்டி மலரா லருச்சித்துத்
தஞ்சமடி யேற்குன் சரணா விந்தமென

324 நாவுக் கமுதூற நாலு கவிப்புலவோர்
பாவுக் கணியாகப் பாடியபத் துப்பாட்டும்

325 முன்னாழ்வார் நால்வர் மொழிந்த திருமொழியும்
பின்னாழ்வா ரோரைவர் பேசுந் திருமொழியும்

326 திருவாய் மொழியுஞ் செகத்துள்ளோர்க் கோதி
இருநூற்று நாற்பதாண் டிங்கிருந்து வாழ்ந்தருளி

327 உற்பவித்த சென்மத் துடலோடும் வைகுந்தப்
பொற்பதியி லேகிநித்தர் புத்தேளி ரேயாகி

328 இருந்தருளு மாற னிவனெப்பா னென்ன
வருந்தின. மட்டாக மவுனித் திருப்பதே

329 சீராகு மென்றே திருப்புளிக்கீழ் வீற்றிருந்தான்
நாரா யணனுதி நாத னரவணையான்

330 வைகுந்த வானாட்டில் வாழச்சு தானந்தன்
வைகுந்தம் மூரில் மறைத்தமிழ்நூல் வந்ததினுல்

331 மண்ணினுர் தங்கடங்கள் வாக்கினு லுச்சரியார்
எண்ணிநினை யார்நினைந்தால் யாமிறப்போ மென்றேங்க

332 அத்தன்மை யாலிறந்த தாரணநா லாயிரமும்
பத்தருக்கு முன்போலப் பாலிக்க வேண்டுமென

333 வந்தசே னைக்கதிபர் வாசற் கரிமுகருஞ்
சுந்தரத்தோள் மன்னனுர் தொண்டரடித் தொண்டாகி

334 ஞானியர்கள் தீபமென நாதமழை மேகமென
ஆனிமா தத்தி லனுடத் திருநாளில்

335 மின்னவிரும் பொன்மதில்சூழ் வீரநா ராயணமாம்
நன்னகரிற் சீரங்க நாத னெனத்தோன்றி

336 அதிகமுனி நாதமுனி யாகிநெடு மாமால்
பதிகடொறுஞ் சென்று பணிந்துதொழு மந்நாளில்

337 ஆரா வமுதுவந்த வாரா வமுதுபத்தும்
ஓரா யிரத்துக் குறைமோரி தென்றுணர்ந்து

338 மால்வடிவாய்த் தோன்றும் வயிணவர்கள் பாலோதி
நூல்வடிவாய் வேதம் நுவலுங் குருகூரன்

339 சன்னிதியி லேகிச் சதுரன் மதுரகவி
சொன்னபத்துப் பாட்டுமவன் றெண்டருப தேசிக்க

340 நூலா கியகண்ணி நுண்சிறுத்தாம் பாதியாய்
மேலாக வன்பவரை விண்ணப்பஞ் செய்துசெய்து

341 நன்னீர்த் திருப்புளிக்கீழ் நாற்பது நாளிருந்து
பன்னீரா யிரமுருவாய்ப் பத்தியுட னுச்சரிக்க

342 மண்முன்னே செய்திருந்த மாதவத்தோ னாதமுனி
கண்முன்னே வந்துன் கருத்தே தெனக்கேட்கப்

343 பேறளித்து நாவீறு பெற்ற மகிழ்ச்சுடரே
கூறரிய வேதக் குலத்தமிழோ ராயிரமும்

344 ஒன்பதின்ம ராகி யுரைத்தமூ வாயிரமும்
என்பரமே கட்டுரையு மென்றிருபா தத்திறைஞ்ச

345 நாலா யிரந்தமிழு நாதமுனிக் குப்பகர்ந்து
மாலாழி சங்கெழுதி மந்திரமோ ரெட்டெழுத்தும்

346 சித்திரையா னுக்குபதே சித்தபடி போதித்து
முத்திரைக்கை மோன முனிவனுட் கொண்டருள

347 அத்தால் வெளியிட் டருளுமிந்தப் பாடல்முற்றும்
இத்தா ரணியோ ரினியுரைக்க நேசித்தால்

348 தாமுள்ள நாளெல்லாந் தத்துவஞா னஞ்சிறந்து
பூமுதல்வன் நீட்டும் பொறிபழுது வாராமல்

349 செல்வத்தா ராகித் திருநாட் டிறையாக
நல்வரத்தை நல்குமென நங்கைகுமா ரன்கருணை

350 மாரிமா றாது மகிழ்ந்து வரங்கொடுக்க
வாரிமா றாதபுவி வாழ்ந்ததென வாழ்ந்தனனே

351 தன்னில் மனமகிழ்ந்து தன்னிலே பூரித்து
நன்னிலைய னாகிநின்ற நாதமுனி வன்வாழி

352 வாழி குருகூரன் வாழிதிருக் கோளூரான்
வாழிபெரும் பூதூரான் வாழியென வாழ்ந்தனமே.



# பாலகன் பாலுண்ணுமைக்துப் பரிதல்.



1 இன்னமுதக் குடமிரண்டா மெனவோங்கி மிகவிம்மி
மன்னுதிரு முலேப்பால்கள் பீரோட மனமிரங்கத்
தன்னுடைய திருமகனே முன்னிலேயாய்த் தவமிருந்த
அன்னநடை யுடையநங்கை யிவையிவைக ளறைகின்ருள்.

## வேறு.

2 தப்பா நிலேயார் தவமே தமிழ்மாரு
அப்பா முலேயிரண்டும் விம்மிநா னூற்றுகிலேன்
ஒப்பாரில் லாதாய் சுரந்துபீ ரோடுகின்ற
இப்பா லருந்தாய்நா னென்பிழைத்தே னென்னமுதே.

3 ஒக்கலேமேல் வைத்தோர் கரத்தா லுனேத்தாங்கித்
தக்கமுலே யூட்டத் தவமுன்பு செய்யாதேன்
மக்கடமைப் பெற்ற மடவார் முகநோக்க
வெட்கினேன் மைந்தா விதியிலியே னுனேனே.

4 சீரார் பொருளேத் திருநாட னுன்றந்தை
நாரா யணன்குறுங்கை நம்பிதிரு முன்றினினின்
ேறாரார் தவமன் றியற்றியுனேப் பெற்றவனேப்
பாராயோ வப்பாவுன் பங்கயக் கண்விழித்தே.

5 மானேர் விழியார்கண் மக்களழத் தாலாட்டி
யேனே னெனச்சென் றெடுத்துமுலேப் பாலளிப்ப
நானேது செய்தேனென் னம்பீ யமுதமாரத்
தேனே சுரந்த திருமுலேப்பா லுண்கிலேயே.

6 விண்ணு மதிண்மேல் விதியிலியேன் மைந்தாநீ
யுண்ணு முலேப்பால் பிதிர்போக்க வோங்கநருந்
தண்ணு நருவித் திரள்போன்ற தாரையையென்
கண்ணு நமுதே விழித்தொருநாட் காண்கிலேயே.

7 உன்னுடைய தந்தை யுனையீன்ற சோபனத்தைத்
தென்னவனூர் கேட்டோர் திருமா மணித்தொட்டில்
பொன்னுலகு மண்ணுலகும் போற்ற வவர்விடுத்தா
ரென்னுடைய கண்ணே யிவைகுறித்து நோக்கலையே.

8 ஏரார் திருப்பரிசா ரத்தினின்று மென்னெந்தை
சீரா ரொளிவீசுஞ் செம்பொன் மணித்தொட்டில்
பாராய் விடுத்தா னுனக்கென்றே பாலகனே
ஓரா யிரங்கதிரு மொவ்வா திதனொளிக்கே.

9 வேத விதியா லெனைவேட் டனைவிரும்பி
யோத வரிய தவஞ்செய் துனையீன்ற
தாதை யுனக்களித்த தண்டரளப் பூந்தொட்டில்
ஈதுறநீ நோக்கி யருளாயென் னின்னமுதே.

10 இருக்காதி வேத மெடுத்தேத்திக் காணு
வுருக்காணு மென்பார் சிலரூமை யென்பார்
திருக்கால்கள் கைக ளுதறிச் சிறிதே
ஒருக்கால் மகனே யழுதா லுளனனே.

11 உன்றனுடைய விருகரத்தி லோர்கார்தான்
சென்றோர் முலையைப் பிடித்துத் திருவாயோ
டொன்ற மடுப்ப வொருகரமற் றம்முலைமே
னின்று வருட நெடுந்தவமுன் செய்திலனே.

12 செய்ய கனிவா யமுதந் திரண்டொழுக
வைய வுதவிக் குறும்போ டணைந்தொருநாட்
பொய்யனேன் கொங்கையுறும் புத்தமுத நீயருந்த
மெய்யனே காண விரும்பிவிதி யற்றேனே.

13 விண்ணுட ரேயரிய மேதினியில் வாழ்வாரே
பண்ணார் மறையே பகலோனே நாண்மதியே
பெண்ணாய்ப் பிறந்துமகப் பெற்றோரே யன்னைமுலை
யுண்ணப் புதல்வர்களு முண்டோ வுலகத்தே.

14 வாயா லழாதே மலசலமொன் றில்லாதே
தாயார் முலைப்பாலோர் சற்று மருந்தாதே
யோயா திருந்தரற்று முற்றாரைக் கண்பாராச்
சேயாரு முண்டோ செகத்திலிவ ரல்லாதே.

15 உள்ளார் மகிழ்ச்சி யுடையாய் குறுநகையாய்
விள்ளாய் கனிவாய் விழியாய் திருநயனம்
கொள்ளாய்நீ யம்மமிறை கோடாதுன் பொன்மேனி
பிள்ளாயுன் னுண்ணினைவைப் பெற்றார்க்கும் பேசாயோ.

16 பேய்க்கொளித்துக் காப்பிட்டுப் பெற்றேன் முலைவிம்மி
வாய்க்கொளித்தை யென்றான் மகனே யதுசெய்யாய்
நோய்க்கொளித்த ஞானத்தர் நோன்பே வென்றுவல்லாய்
தாய்க்கொளித்த சொல்லு முளவோவென்றார் வேந்தே.

17 ஆழிநீர் வண்ண னருளோநான் முன்செய்த
ஆழின் வினைதானோ வுலகத்தீ ரென்னுடைய
தோழிமீர் மைந்தனழா னுண்ணானோர் சொற்றான்
வாழி யிதைநோக்கி வகுத்தெனக்குக் கூறீரோ.

18 மெச்சோர் குறியால் விளங்கியிந்த மேதினியோர்
அச்சுதனா ராகுமிவ னென்னிலவன் றான்முன்னாள்
பச்சைக் குழந்தைப் பருவத்தே பூதனைதன்
நச்சுமுலை யுண்டானென் ஞானமுலை யுண்ணானே.

19 எடுத்திருத்தி வைத்தா லிருப்பா னசையான்
படுத்தணையிற் சாய்த்தாற் படுப்பா னிளகான்
அடுத்துமுலை யுண்ணென் றணைத்தா லருந்தான்
தொடுத்ததிலை மைந்தனைப்பா ரேதுரைப்பே னென்றோழீ.

20 சப்பாணி கொட்டாய் தவழாய் தளர்நடையென்
அப்பா நடவாய் அமுதே புறம்புல்காய்
இப்பார் முதலாய வீரே முலகேத்தும்
ஒப்பா ரிலாதாயா னென்னென் றுயிர்வாழ்வேன்.

---

ஸ்ரீ

வடிவழகிய நம்பிதாஸர் இயற்றிய

# மதுரகவி யாழ்வார் பிரபந்தம்.



1 செப்பரிய பெருங்கீர்த்தித் திருவழுதி வளநாட
னிப்பரிசே சென்றிறைவ னிணையடிக்கீழ் வீற்றிருந்தா
னப்பெரிய கதையிறைவ னருளியதிற் சிலகூறி
யொப்பரிய மதுரகவி செய்திறமு மோதுவாம்.

வேறு.

2 சீரார் திருவாய் மொழிப்பெருமான் செங்கட் கரிய திருமேனி
நாரா யணனை யடைந்ததற்பின் ஞால மிரங்க மதுரகவி
நீரா யுருகி மோகித்துத் தேறி மாற னிகரில்லா
வேரார் கோலத் திருவுருவை யிலங்கு ஞானத் திருப்புளிக்கீழ்.

3 என்று முண்டாம் படிகுறித்தங் கேறி யருளப் பண்வினுத்துக்
குன்றம் போன்றங் கருள்விளங்குங் கோயில் செய்தக் கோமா
கன்றி யொன்றுந் தனக்கின்றி யல்லும் பகலு மவன்பணியி
னின்றங் கீரெட் டுபசார நேமி விளங்கும் படிபண்ணி.

4 திருவா சிரியந் திருவிருத்தந் திருவந் தாதி திருமால்சீ
ருருவாந் திருவாய் மொழியென்றே யுரைத்த பிரபந் தங்களையு
மிருமா வினையிற் படுபவரை யிருந்து திருத்தி யோதுவித்திட்
டொருமா நொடியுஞ் சன்னிதியை யகலா தாங்கே யுடனுறைந்

5 ஓது மாண்டன் றிருநூற்று நாற்ப திருந்திவ் வுலகனைத்தும்
பூத நாத னடியவராய்ப் பொருந்தும் வண்ணந் திருத்துவித்த
வேத நாலுந் தமிழ்செய்த விமல னருளா லுடலோடே
போத விரைசெய் பொழிலாடித் திருமா யணிமண் டபஞ்செறிந்த



